36




# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - ஆனி - 2015 - ஜூன்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - ஆனி - 2015 - ஜுன்    இதழ் - 36

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

திரிபுரங்கள் செற்றானைச் சேவேறும் பெருமானைத்
தேவர்க்கும் அரியானைத் தென்னர் கோவைத்
திசையெங்கும் நிறைந்தான்னை, தெய்வ மாலைத்
தேவாரம் உகந்தானை, திண்போர்ச் சூலம்

தரிகரத்துப் பெரியானைத் தண்சடிலச் சங்கரனைத்
தலைநிறைந்த புனலானை, தக்கார்க் கெல்லாம்
தருவானைத் தண்வேளூர்ப் பிரானார் தம்மை,
தம்மடியார்க் கென்றென்றும் தருவா னாகிப்

பெரியபுகழ் வன்னிவனம் தனைத்தேடி வந்தானை
பெருங்கொற்ற வாள்வழுதிக்கே அருளி னானை
பிறங்கரவப் பணிசூடிப் பேயோடாடிப்
பேணுவான் துணையான பேதையாளை

துரியநிலை கடந்தாளைத் தோன்றுதிரு நெல்லையினை,
துணைநின்று துரிசறுக்கும் தூய்மை யாளைத்
துங்கமிகு பொன்னணியும் தோகையாளின்
துணையடிகள் சதமென்பார் துலங்கலாமே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

**புலனடக்கம்**

திருவள்ளுவர் தொடங்கி இன்றைய சமுதாயக் கவிஞர்கள், கட்டுரையாளர்கள், தமிழ் அறிஞர்கள், அனைவராலும் வற்புறுத்தப்படுகின்ற பண்பு இதுவே. ஆனால் அவர்களே முற்றும் துறந்த முனிவர்களாலும் யோகிகளாலும், ஞானிகளாலும் கூட புலன்களை அடக்குவது கடினம் என்பதை உறுதிபடத் தெரிவிக்கிறார்கள்.

இதிலே திருமூலர் மட்டும்

"அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கில் அமரரும் அங்கு இல்லை
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவு அறிந்தேனே" (திருமந்திரம்- பா:2009)

ஐம்புலன்களையும் அடக்குவது மிகக் கடினம். அடக்கு என்ற ஆணையிடுபவர்கள் அனுபவம் அற்றவர்கள் என்று தெளிவாகக் கூறுகிறார். திருமந்திரம் சொல்வது எளிதான முறை.

ஐம்புலன்களையும் நல்ல செயல்களுக்குப் பயன்படுத்தப் பழகிக் கொண்டால் மனிதர்களின் ஒழுக்க நெறி உயரும் என்பது மட்டுமல்ல, அவர்களாலே எதனையும் சாதிக்கும் நிலை ஏற்படும். நல்லவற்றை மட்டுமே பார்க்கப்பழக வேண்டுமே ஒழியக் கண்களை மூடிக் கொள்வதாலே எந்தப் பயனும் கிடைக்காது. வாழ்கின்ற காலத்திலே நல்லவற்றைக்கேட்டு நல்லவற்றைப் பார்த்து நல்லவற்றைப் பேசி நல்இன்பங்களைத் துய்த்து நல்லவை எல்லாம் நம் வாழ்க்கையிலே பெற முடியும். இதற்குக் கடினமான சட்டங்களோ நெறிமுறைகளோ பயன்படா. பயன்படுத்துவதிலே அர்த்தமும் இல்லை. சட்டங்களாலே எந்த ஒரு தீமையையும் முழுமையாக நிறுத்தவோ அழிக்கவோ

முடியாது. மக்கள் தங்களுடைய மனதிலே நல்ல சிந்தனைகளை ஏற்றுக் கொண்டால் ஒழிய, தீமைகளை முழுமையாக அழிக்க வழியே இல்லை. ஐம்புலன்களை நெறியான முறையிலே பயன்படுத்தக் கற்றுக்கொண்டால் தீமைகள் நெருங்காது; வளர்ச்சி தடை படாது. இளமையில் இருந்தே உண்மையைப் பேசுவது, நல்லவற்றையே எண்ணுவது, நல்லவற்றையே துய்ப்பது என்ற கொள்கையைக் கொண்டுவிட்டால் தீமைகள் நம்மை நெருங்காது.

சிறுவயதிலிருந்தே ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போன்ற நல்வழி நூல்களைப் பெற்றோர்களும் கற்றுக் குழந்தைகளுக்கும் போதிப்பார்களே ஆனால் நல்ல குடிமக்களை வளர்க்க முடியும்.

நேர்மறைச் சிந்தையாலே புலன்களை அடக்குவதை விட நெறிப்படுத்துவது சிறந்த பயனையும் வளர்ச்சியையும் தரும். எதிர்மறைச் சிந்தனையோடு அடக்க முயல்வதோ, அழிக்க முயல்வதோ துயரத்தில் தான் ஆழ்த்தும்.

நமக்கு இறைவன் கொடுத்த வரன்களான ஐம்புலன்களையும் நெறியோடு பயன்படுத்தி வளமோடும் நலமோடும் வாழ்ந்து உலக வளங்களிலும் ஆன்மீகப் பயிற்சியிலும் உயர்வோமாக.

*ஆசிர்வாதங்கள்*

*ஸ்ரீ சற்குரு நாதன் துணை*



தவத்திரு குமார தேவர் அருளிய

## மகாராஜா துறவு (தொடர்ச்சி)

101. விடயஇன்பு அதனில் நசைஉளோர் தமக்கும்
விரிவதாம் பேரின்பச் சுவையின்
அடைவினைச் செவியிற் கேட்ட அக்கணமே
அவற்றினை அகற்றிட வருமேல்
இடைமுதல் ஈறுஇல் ஞான ஆனந்தம்
எய்தினோர் களும்பினும் இந்தக்
கடைமனை வாழ்வை நினைவர்கள் என்றால்
கண்டனர் நகையரோ சொல்லாய்.

ஐம்புலன்களினால் அனுபவிக்கக் கூடிய சிற்றின்பங்களில் ஈடுபாடு உடையவர்கள் பேரின்பநிலை விவரிக்கக் கேட்ட கணத்தி-லேயே உலக இன்பங்களைத் துறந்துவிட முனைவார்கள். ஆதியும் அந்தமும் இல்லாத ஞானம் என்ற ஆனந்த நிலையை அடைந்தவர்கள் மறுபடியும் கீழான உலக வாழ்க்கையை விரும்புவார்கள் என்றால் கேட்போர் சிரிக்க மாட்டார்களா? சொல்லுங்கள்.

102. பற்றுஇலை ஆயின் அவையினில் இருப்புஏன்
பலழயஊழ் வினைஎனில் ஆசை
சற்றெனும் உதிப்பித் தல்லவோஊட்டும்
சகஇன்பில் இறையெனும் இச்சை
முற்றுஉணர் ஞானத் தோர்கள்பூண் பர்களோ
முடிவில் ஆனந்தமே பருகி
நிற்றலே மீட்டும் விழிப்பினும் கானல்
நீரில்கண்டு உள்முகம் அடைவார்.

இல்லறத்தில் பற்று இல்லாத ஞானிகள் இல்லறத்தில் இருப்பதேனோ? அதற்குக் காரணம் பழையதான ஊழ்வினைப் பயன் என்று சொன்னால், சிறிது அளவேனும் விருப்பம் ஏற்பட்டு அல்லவோ அப்பொருள்களை அனுபவிக்கச் செய்யும். முழுமையாகத் தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகள் உலக இன்பத்தில் சிறிது அளவேனும் விருப்பம் கொள்வார்களோ? முடிவில்லாத ஆனந்தத்தை அனுபவித்து அந்நிலையில் நிற்றலே அவர்க்கு உரியது. சமாதி நிலையில் இருந்து உணர்வு நிலைக்கு வந்தாலும், இவ்வுலகைக் கானல் நீர் என எண்ணி, மீண்டும் உள்முகமாகச் சமாதி நிலை அடைவர்.

103. பவம்அதை இனிமை எனவெணி விடயம்
பற்றிநின்று உழன்றவர் தாமே
பவம்அதை இனிமை அல எனின்விடயப்
பற்றுஅறுத்து அருள்குரு அடைந்து
பவம்அதை அறுக்கும் நெறிஉணர்ந்து அருளின்
பரஇன்பம் அடைந்தவர் தாமும்
பவம்அதை இனிமை எனஎணின் அலவோ
பற்றுவர் விடயஇன்பு உரையாய்.

இவ்வுலக வாழ்க்கை இன்பம் தருவதென எண்ணியவர்கள் வீடு தோட்டம் முதலான உலகப் பொருள்களின் மேல் பற்று வைத்து, இல்வாழ்வில் எப்போதும் சுழன்று வருந்துவார்கள். அவர்கள் உலக வாழ்வு இனிமை தராது என உணர்ந்து உலகப் பொருள்களின் மேல் உள்ள பற்றினை நீக்கிப் பிறப்பினைப் போக்கும் வழியை அறிந்து கொள்ள முயல வேண்டும். அப்படிப் பாவம் என்ற பந்தத்தைக் குருவின் அருளால் அறுக்கும் வழியைக் கண்டு கொண்டவர்கள் பேரின்ப நிலையை அடைவார்கள். இப்படிப் பேரின்ப நிலையை அடைந்தவர்கள் உலகப் பொருள்கள் இன்பம் தருவன என்று நினைத்தால்தானே உலக இன்பத்தை விரும்புவார்கள்! சொல்வீர்.

104. கொடிமுதல் வாடும் வேர்முழு தினையும்
கோது அறக் களைந்திடில் களைந்தும்
படிமிசை கொடி பூ காய்பழம் ஓங்கல்
பகர்அதி சயம்ஃ தினைப்போல்
அடிநடு ஈறுஇல் பிரமம்தான் ஆகி
அகப்பற்றை அறுத்தவர் இடத்தும்
மடிவுறு மனையில் விரும்பியே நெஞ்சம்
வருத்தனம் ஆதல்என்று அறைவார்.

ஒரு பூங்கொடியை வேரோடு பிடுங்கிய பிறகு மீண்டும் துளிர்த்து பூ, காய், பழங்கள் தருவது அதிசயம். (துளிர்த்துப் பயன்தராது) அதுபோல, தானே பிரம்ம சொரூபம் என்று உணர்ந்து ஆசையை அறுத்தவர்கள் மீண்டும் விஷயங்களில் ஈடுபடுவது அதிசயம். (ஈடுபடமாட்டார் என்பது கருத்து)

105. ஆணவம் அதலனைத் தோய்ந்துஉட லினைநான்
ஆம்எனத் தினவெருவு அவைவயைப்
பேணலலைச் சுகம்என்று உள்மகிழ்ந் திடுவோன்
பேரின்பத்து ஆசையது ஆகிப்
பூணஅஞ் ஞானம் இலைஅதின் ஞானம்
பொருந்திஅச் சொரூபம்தான் ஆகி
ஏணஆ னந்தத்து அழுந்துவோன் விடயம்
எய்திடில் ஞானமே இலையால்.

ஒருவன் அஞ்ஞான இருளில் மூழ்கித் தன் உடலையே தான் என்று நினைத்துக்கொண்டு அழியக் கூடிய இவ்வுடலைப் பேணுவதற்குத் தேவையான காணி, மனை முதலியவற்றைத் தேடி அதைப் பேணுவதே சுகம் என்று மகிழ்ந்திருக்கிறான். அவனுக்குப் பேரின்ப நாட்டம் வந்ததும் அஞ்ஞான இருள் விலகி விடுகிறது. அப்படிப் பூரண ஞானம் பெற்றவன், நிலைபெற்ற ஆனந்தத்தில் அழுந்தியவன், மறுபடியும் உலக சுகங்களில் பற்றுக் கொண்டு சிற்றின்பத்தை விரும்பினால் அவன் தத்துவ ஞானத்தை மறந்த படியால் ஞானி ஆகமாட்டான்.

106. கனவதனில் உணர்வுஇலது காணும்தனு
ஆதிகளைக் கருதியே நின்று
உனும் அவரின் இதுகனவுஎன்று உணர்ந்தவர்கள்
நசைஇலதின் உலகு தன்னில்
தனதுசுய உருவதனை அனுபவத்தில்
தான் உணர்ந்துஇச் சகமது எல்லாம்
மனம்அதனில் சாலம்என உணர்ந்தவன்இவ்
வுலகின்பின் மையல் நீங்கும்.

கனவில் தோன்றும் காட்சிகள் மெய்யல்ல என்பதை உணர்கிறோம். அப்போல உலகத்தில் தோன்றும் காட்சிகள் எல்லாம் கனவுதான், மெய்த் தோற்றமல்ல என்று உணர்பவர்கள் இவ்வுலக வாழ்க்கையை விரும்புவதில்லை.தன்னுடைய சுய வடிவம் சச்சிதானந்த ரூபம் என்று அனுபவித்து உணர்ந்த ஞானிகளுக்கு இந்த

மாய உலகில் தோன்றுவதெல்லாம் இந்திரஜால வித்தை போலத் தோன்றும். அதனால் ஆசை நீங்கிவிடும்.

107. கதிரவன்முன் இருள்இருக்கும் நயனமுடை
ஒருவன் குழிக் கண்ணே வீழும்
அதிகவலிச் சூரன் அமர்க் களத்துவெரு
வுவன்கிருத நறை அக் காரம்
இதம்உளபா யசமும் நிரம்ப அருந்தினன்கூழ்
தனில்செய்வன் இச்சை என்றால்
விதம்இவைநான் கினுக்கும்குறை அதில்ஞானிக்கு
இழுக்குஆகும் விடயம் சென்றால்.

சூரியனுக்கு முன்னே இருள் இருக்குமாயின், நல்ல கண்ணுள்ள ஒருவன் குழிக்கண் வீழ்வான் ஆயின், அதிக வலிமை பொருந்திய வீரன் ஒருவன் போருக்கு அஞ்சுவான் ஆயின், நெய், தேன், சர்க்கரை ஆகியன சேர்த்துப் பக்குவமாய்ச் செய்யப் பட்ட பாயாசத்தை நிறைய உண்ட ஒருவன் கூழை விரும்புவான் ஆயின், இச்செயல்கள் நான்கினுக்கும் குறைவுண்டாம். அதைப்போலத் தத்துவ ஞானிக்கு, அவன் மனம் உலகப் பொருள்களின் மேல் ஆசை கொள்ளுமானால் இழுக்கு ஏற்படும்.

108. இங்குஉறைந்த பாண்டம் அதின் வாதனையில்
வாதனைகள் இருக்கும் என்றல்
துங்கஅறி வுடையோர்கட்கு இன்றியமை
யாததொழில் தொடங்கி நிற்றல்
அங்கியைத்தம் பனவல்லார்க்கு அனல்சுடாத
தின்வினைகள் அடுக்கா என்றல்
தங்கும்வினைக்கு ஏதுவாம் விடயம்அதில்
விருப்புஆதி சாரா என்றல்.

உயர்ந்த அறிவுடைய ஞானிகளுக்கு. பெருங்காயம் இருந்த பாண்டத்தில் உள்ள வாசனைபோல, உலக வாசனை தேக வாசனை சாத்திர வாசனை ஆகிய வாசனைகள் இருக்கும் என்று நீ நினைக்காதே. அவர்கள் அந்த வாசனைகள் இல்லாமலே உலகிற்கு

வேண்டிய செயல்களைச் செய்யத் தொடங்குவார்கள். அவ்வாறு தொடங்கி அந்நிலையில் நிற்பது இன்றியமையாத கடமை. மந்திரத்தினால் நெருப்பைக் கட்ட வல்லவர்களுக்கு, அந்நெருப்பு சுடாமல் இருப்பது போல, அந்தச் செயல்கள் அவர்களைக் கட்டுப்படுத்தாது. அவர்கள் செய்யும் கர்மாக்களின் பலன்கள் ஞானிகளைப் பற்றாது.

109. உணர்வுடைய ஞானிஎவை புரிந்திடினும்
இழிவுஇல் இழிவு உரைத்த தாகின்
இணையில் இரு தீயன்என்பர் யூகம்இல்
அதனால்மற்ற எவைகள் செய்தும்
அணைவுஅதில்தாழ் வெனும்அவனே தீயன்மிக
ஞானம்அதற்கு ஆகும் தாழ்வால்
நணுகின் அன்றோ ஞானம்ஒரு வனைஞானி
எனப்பெயரும் நண்ணி நிற்றல்.

சீவன் முத்தனான ஞானிக்கு எந்தச் செயல் செய்தாலும் இழிவில்லை. (கர்ம பலன் அவருக்கு இல்லை) ஞானியின் செயல்களைப் பழிப்பவனே இழிந்தவன். அறியாமையினால் தன்னலத்தோடு உலக பந்தங்களில் உழன்று அவற்றின் பயன்களை அனுபவிப்பவன் கொடியவன். அறிவில்லாதவனுக்கு விளங்காததால் ஞானத்துக்கோ ஞானிக்கோ ஏதேனும் தாழ்வு உண்டாகுமா? (ஆகாது என்பது கருத்து) ஞானத்தை விரும்பிச் சாதனைகள் செய்து பூரண ஞானம் பெற்றால் அல்லவா அவனுக்கு ஞானி என்ற பெயர் கிடைக்கும்.

110. கருவயிற்றை உடையதுவும் கனவயிற்றை
உடையதும் கருதிப் பெண்ணின்
உருவதனைக் குறிப்பதின்நோக் கிடில்தோன்றும்
உளபடியே உலகு தன்னில்
குரு வைஅடைந்து அவன் அருளில் சொரூபத்தை
அனுபவமாக் குறித்து வோரும்
இருவையத்து இடம்பமாய்த் தமைஞானி
என்போரும் ஏதில் தோன்றும்.

கருக்கொண்ட வயிற்றை உடைய உடம்பும், மகோதரம் என்ற வியாதியினால் கனமான வயிற்றைக் கொண்ட உடம்பும், பெண் வடிவத்தைக் குறிப்பால் பார்க்கும் போதே விளங்கும், உள்ளபடியே இவ்வுலகத்தில் குருவை அடைந்து அவன் அருளாலே தமது உண்மை வடிவத்தைச் சமாதி நிலையில் இருந்து கண்டவருக்கும் பரந்த உலகத்தில் பிறர் தன்னை மதிக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் பொய்யாக ஞானிபோல ஒழுகுபவர்களுக்கும் உள்ள வேறுபாடு பார்த்த உடனேயே தெரிந்துவிடும்.

111. அருச்சுனற்கும் இராமருக்கும் அதிகாரம்
அலைபார்த்தே அறைந்த நூலின்
கருத்துஅறியாய் ஞானம்ஒன்றே பிரமாணம்
சரிதைஅது கணக்கன்று ஆகும்
விருத்தம்அறிவு ஆசாரம் உடையோனே
ஞானிஇல்லோன் விருத்தன் ஆகும்
திருத்தமுடன் அமைச்சஇது துணிவுஎன்றே
உட்கொள்வாய் தீரன் ஆகி.

அருச்சுனனுக்கு, இராமபிரானுக்கும் அரசர்களுடைய பக்குவங்களை நோக்கி முறையே கண்ணபிரானும், வசிட்டரும் கூறிய பகவத் கீதை, ஞான வாசிட்டம் ஆகிய நூல்களின் கருத்தையும், அமைச்சனே நீ அறியாது இருக்கிறாய் ஞானம் ஒன்றே அறியவேண்டியது. வரலாறு முக்கியம் அல்ல. போகங்களில் நாட்டம் கொண்டு பொருள் ஈட்டும் ஆசைகளைத் துறந்து, தத்துவ விசாரமும் ஒழுக்கமும் உள்ளவனே ஞானி. இவை இல்லாதவன் அஞ்ஞானி என்பதை நிச்சயமாக நீ உணர்ந்து கொள்.

**மகாராசன் சமாதியில் இருக்க மந்திரி கண்டு வியப்புறல்**

112. என்றுஅங்கு அநேக மாய்விரித்தே
இராச யோகி உரைசெய்து
நின்று வாக்கு தனைஅடக்கி
நிமிடத்து அகற்றி மனத்தினையும்

ஒன்றும் இல்லா வெறும்பாழாய்
ஒன்றாம் சமாதி தனைஅடைந்தான்
நின்றஅங்கு அமைச்சன் இதுகண்டுஇந்
நேர்மை புதிதுஎன்று அதிசயித்தான்.

இராச யோகியான மகாராசன், இவ்வாறு பலவிதமாய் ஞான நூல்களின் சாரத்தை விரித்துச் சொல்லி, யோக சாதனத்தில் நிலைத்துப் பேச்சை அடக்கி, ஒரு கணப்பொழுதில் உலகப் பொருள்களின்மேல் பற்றுள்ள மனத்தை நீக்கி, ஒருமுகப்படுத்தி, ஒன்றும் தோன்றாத வெறும் சூனியமாய் விளங்கும் சமாதி நிலையில் இருந்தான். அங்கு நின்ற அமைச்சன் இதனைக் கண்டு, இந்தச் சமாதி நிலை புதியது என்று வியப்படைந்தான்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

19.5.2015 அன்ற கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ் கோவிலூர் மடாலயம் இணைந்து நடத்திய ஆவணங்கள் வெளியீட்டு விழா நிகழ்ந்தது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள். பழனித்தைப்பூசமும் நகரத்தார் காவடிகளும் என்ற குறுந்தகடும், நகரத்தார் பட்டயங்கள் நகரத்தாரின் தர்மசாசன அறப்பட்டயங்கள் என்ற ஆவண நூல்களும் வெளியிடப் பெற்றன. இவற்றை வெளியிட்டு நீதியரசர் மாண்புமிகு ஏ.ஆர். லெட்சுமணன் அவர்கள் சிறப்புரை வழங்கினார்கள். முனைவர் கண. சிற்சபேசன், முனைவர் நற்கதை நம்பி அய்க்கண். முனைவர் நா. வள்ளி, முனைவர். பெருமாள் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். முன்னதாகக் காப்பியக் கவிஞர் நா. மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார். நிறைவாக முனைவர் சே. குமரப்பன் நன்றி கூறினார்.

ஆவணங்கள் தயாரிக்க உதவிபுரிந்த பெருமக்கள் விழாவில் சிறப்பிக்கப் பெற்றனர்.

27.5.2015 அன்று கோட்டையூர் ஸ்ரீ சொக்கையா சுவாமி அவர்களின் குருபூசையும் 31.5.2015 அன்று கொத்தமங்கலம் ஸ்ரீ அருணாசல சுவாமி குருபூசையும் 1.6.2015 அன்று

ஸ்ரீ மத் திருக்களர் ஆண்டவர் குருபூசையும் 7.6.2015 அன்று 6ஆவது பட்டம் அண்ணாமலை ஞான தேசிகர் குருபூசையும் நடைபெற்றன.

23.5.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் திருக்குறிப்புத் தொண்டர் பற்றி ஆசிரியர் முத்துப் பழநியப்பன் சிறப்புரை ஆற்றினார்.

29.5.2015 அன்று தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகளின் 93ஆவது பிறந்த நாள் விழா நிகழ்ந்தது. சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விழாவிற்குத் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள். பொ. திருகூட சுந்தரம் பிள்ளை எழுதிய அப்பாவும் மகனும் என்ற நூல் வாழ்வியல் விஞ்ஞானம் என்ற பெயரில் அதன் முதல் பகுதி வெளியிடப் பெற்றது. தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் முனைவர். இ. சுந்தர மூர்த்தி நூலை வெளியிட்டுச் சிறப்புரை ஆற்றினார். திரைப்படப் பாடலாசிரியர் உயர்திரு. கவிஞர். பிறைசூடன் வாழ்த்துரை வழங்கினார். முன்னதாகக் காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். நிறைவாக டாக்டர் சே. குமரப்பன் நன்றி கூற விழா இனிதே நிறைவடைந்தது.

## கோவிலூர் ஆண்டவர் அருளிய சுபாநுபவத் திருவாக்கு (தொடர்ச்சி)

**(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)**

திருநெல்லை, அம்பாள், கோவிலூர்த் திருத்தலத்தே அருளாட்சி செய்பவர். இவரை, ஆண்டவர், அவர்தம் உபாசனா மூர்த்தியாக ஏற்றார். தற்போது நம்மிடையே படிக்கப்படும் திருநெல்லை இதழின் பெயர்க்காரணமும் இவரே.

தாயிடம், தன் தொல்லைகளைக் கொட்டித் தீர்க்கும் மகவு போல, துதித்தல், ஏங்குதல், வேண்டுதல் ஆகியவற்றை முன்னிறுத்திய ஐம்பது பாடல்கள் இப்பகுதியில் பாடப்பட்டுள்ளன. வெவ்வேறு செய்யுள் வகையைச் சார்ந்த பாடல்கள் இதில் உள்ளன. சில எடுத்துக்காட்டுகள் வழியாக இப்பகுதியினை அறிய முயல்வோமாக.

இந்நூலுக்கான தொடக்கச் செய்யுளாக, "சத்தே, என் சித்தத்து ஒளியாய்" எனத் தொடங்கும் கணபதி வணக்கம் கண்டோம். இப்பகுதிக்கென, காப்புச் செய்யுளாக, மறுபடியும் கணபதி வணக்கம் கூறப்படுகிறது. இதிலிருந்தே, இப்பகுதியானது ஒரு தனி நூலுக்கான பெருமையுடையது என அறிகிறோம்.

காப்புச் செய்யுள்

**அருவாய் உருவாய் அருவுருவாய், மேலாம்**
**திருநெல்லை யம்மை உருச்செப்ப - உருநாமம்**
**ஆரணங்கள் ஓத அரியபரா சக்திபெற்ற**
**வாரணமே தந்துஆள் வரம்.** (பாடல் 8, பக்கம் 10)

(ஆரணங்கள் = நால் வேதம், வாரணம் = விநாயகர்)

அம்மையின் வடிவம் மற்றும் புகழ் போற்றுவதற்கு, விநாயகப்பெருமானின் அருள் வேண்டப்படுகிறது. உருவமுடைமை, உருவமின்மை, இரண்டிற்கும் இடைப்பட்டமை, மற்றும் இவை மூன்றுக்கும் அப்பாற்பட்டமை போன்ற அம்பாளின் வடிவமைப்பு, சுத்தப்பிரம்மமானது பரப்பிரம்மமாகவும் ஆகியமைக்குக் கூறப்படும் வரையறைக்கு ஒப்பானது. இவ்வாறு, ஆண்டவர் திருநெல்லை அம்பாளை, பிரம்மமாகவே காண்கிறார் எனலாம்.

திருநெல்லை அம்மையை உணர விரும்பினால்,

**வானாடர் மணம்பொருந்தும் வாழ்வுநினை யாதே**
**மண்நாடர் பதியடையும் வாழ்க்கைநினை யாதே**
**நான்நான்என்று இல்வாழ்வில் நண்ணிஉழ லாதே**
**நாலிரண்டு சமயநெறி நாடியலை யாதே**
**ஆனாலும் அத்துவித நிலையைமற வாதே**
**அகம்புறமும் ஓர்உருவை அன்றிஉண ராதே**
**தேன்நாடும் காவில்மலர்த் தேனாறு பாயும்**
**தென்கழனித் திருநெல்லை மின்பாதம் நாடே.**

(பாடல் 26, பக்கம் 20)

(வானாடர் = தேவர்கள், காவில் = சோலை)

மிக உயர்வுடையவை எனக் கருதப்படும் தேவர்கள் மற்றும் மன்னவர்களின் வாழ்க்கைகளும் கூட, இன்ப துன்பம் எனும்

இரட்டைகளை உடையவை. இவற்றால், இரட்டைகளற்ற சமநிலை பெற இயலாது. சமநிலை பெற்றால் மட்டுமே திருநெல்லை எனும் ஒருமையை உணரலாகும். நான், நான் எனும் அகங்காரமோ, பலவாறாகப் பிரிவுபட்டுள்ள மதங்களோ கூட, ஒருமையை உணர உதவமாட்டா.

'இனித் திரும்புதல் என்பது இல்லை,' எனச் சரணடையும் தன்மையைக் கீட்கண்டவாறு கூறுகிறார்.

**வந்தே புவியின் மதிஅவித்தை**
**வசமாய்க் காய வசமாக**
**வந்தே வருத்தும் சுகாசுகத்தை**
**மாய்க்கும் வழியேது எனத்தேடி**
**வந்தேன் உனது திருநெல்லை**
**மகத்துஆம் பதிவந்து உன்அருளால்**
**வந்தேன் வந்தேன் பரிபூர்ண**
**வனச மலர்த்தாள் தான்ஆக.** (பாடல் 19, பக்கம் 15)

(வசமாக = அடிமைப்பட்டு, காயவசம் = உடல் நான் எனும் (தேகாத்ம) புத்தி, சுகாசுகம் = இன்ப துன்பம், மகத்து = பெருமை, வசன = தாமரை, தான்ஆக = ஒருமையுற).

உனதருளாலே உன்தாள் வணங்கி உய்ய வந்தேன் எனக்கூறி, உடல் துன்பம் மாய்க்க தேவியின் அருள் வேண்டுகிறார். தாம் உடலல்ல எனவும், தமக்கு இரட்டைகள் வேண்டாமெனவும், ஆனால் திருநெல்லையின் தாமரை மலர்த்தாளில் ஒன்றிப்பு வேண்டுமெனவும், அருள் கேட்கிறார். 'வந்தேன், வந்தேன்' எனும் அழுத்தத்தால், 'இனி உலகியலுக்குத் திரும்பேன்,' எனச் சரணடையும் தன்மை காட்டப்படுகிறது. (குருவிடம் சரணடையும் மாணவனின் நிலை இது எனத் தத்துவம் கூறுகிறது.)

திருநெல்லை அம்மையின் பெருமை எத்தகையது எனக் கீட்கண்டவாறு கூறுகிறார்.

**ஆசைஎனும் விடம்அகற்றும் அருமருந்தை அம்பரத்துக்கு**
**அடங்காது அந்த ஆசுஅகலும் அம்பரத்தை அணுவினுக்கும்**

**அணுஆகி, அனந்தம் ஆகும் தேசுஉருவ வடிவாளை,**
**சித்தம்முதல் ஆறுஅறியாத் திறத்தி னாளைக் கோசம்எனும்**
**ஐம்பூதக் குரம்பைஉறைந்து உறையாளைக் குறித்து**
**வாழ்வாம்.** (பாடல் 21, பக்கம் 17)

(அம்பரம் = வானம், ஆசு = குறை, தேசு = ஒளி, கோசம் = தொகுதி, குரம்பை = உடல்) மிகச்சிறியதான அணுவும், மிகமிகப்பெரிய முடிவற்றதும் (அனந்தம்) எதிர்மறையாதல் போல, உடலுடன் வாழ்தலும், கட்டுப்படாத உறையாமையும் (கால அதீதம்) எதிர் மறையே, ஆனால் அம்பாளிடம் இத்தகைய எதிர்மறைகள் ஒருமையுறுகின்றன. அது எவ்வாறெனில், அவள், அனைத்திற்கும் மூலமாதலால், அணுவாகவும், அதே போதில் அனைத்தும் அவளுள் அடக்கமாயுள்ளதால் (விபு) அனந்தமாயும் உள்ளாள். மேலும், சிறு பெண் குழந்தை வடிவில் கோவிலூர் ஆண்டவருக்குக் காட்சி கொடுத்தமையால் உடலுடன் வாழ்பவளாயும், அதே போதில், பரப்பிரம்மம் எனப்படுவதால், உறையாத கால அதீதமாகவும் கருதப்படுகிறாள். மேலும், மனிதனின் மாறாத ஆசையை அகற்றும் அருமருந்தெனவும், குறையேதுமற்ற மிகப்பெரிய வானமாகவும், சித்தம் தொடங்கிய, அறிவுகிட்டும், ஆறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டவளெனவும் அம்பாளின் மேன்மை கூறப்படுகிறது.

திருநெல்லை அம்மையைச் சரணடைந்த பின்னரும் உலகியலை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. அதற்கான துணிவு வேண்டுகிறார்.

**ஓர்ஆகம் தனைஅசைக்கும் ஆவே சத்தை,**
**ஒருகர்த்தா உண்டுஎன்னாது உலகில் சொல்லும்**
**பேராத சோதிடத்தைக் காலம் என்னாப்**
**பித்துஆகும் வயித்தியத்தைப்; பிறங்கும் சித்தை**
**ஓராது சடங்களையும் தெய்வம் என்றே**
**உணர்ந்திடும்இம் மார்க்கம்எலாம் உணர்வாக் காணும்**
**சீர்ஆகும் துணிவுதனை அருள்வாய் தெய்வத்**
**திருநெல்லை நாயகியே அம்மே அம்மே.**

(பாடல் 15, பக்கம் 14).

(ஆகம் = உடல், ஆவேசம் = ஆற்றல், பேராத = பொய்யான, கர்த்தா =

செய்விப்பான், ஓராது = நினையாது, சடம் = உணர்வோ உயிரோ அற்றது, மார்க்கம் = மதம்)

அத்துவித தத்துவத்தில், உடல் மற்றும் காலம் என்பன தோற்றம் (மித்யா) மட்டுமே. ஆனால் உலகியலில், உடலைக் காக்கும் வைத்தியம் மற்றும் காலவேறுபாடு போற்றும் சோதிடம் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. பிரம்மத்தை உணர்தற்கு நேரடியாக உதவாத உலகியல் அறிவுகளனைத்தும் 'கலைகள்' எனப்படுகிறது. வைத்தியமும் சோதிடமும் உண்மை அறிவல்ல. இதனாலேயே, அத்துவிதம், 'உடல் நானல்ல', எனவும் 'இறையாற்றலால்' விதிக்கப் பட்டவற்றை, அந்த ஆற்றலுக்கு உட்பட்டவன், உணரவோ மாற்றவோ இயலாது, எனவும் கூறுகிறது. இதேபோல, தெய்வத்தைக் காட்ட வேண்டிய மதங்கள், எங்கும் ஒளிரும் பிரம்ம தத்துவத்தைக் கருதாது, உணர்வு மற்றும் உயிரற்ற சடத்தையே தெய்வமாகக் காட்டு கின்றனவே எனவும் ஆதங்கப்படுகிறார். எவ்வாறாயினும் இவற்றையும் கூட, பிரம்மமாகக் காணும் துணிவு வேண்டுகிறார். (ஆண்டவர் கூற்றுப்படி, மதங்கள் தத்துவத்தினின்றும் வேறுபட்டன எனத் தெரிகிறது. இவ்வேறுபாடு பற்றி, அவர் வாயிலாகவே பின்னர் காண்போம்.)

நமக்கெல்லாம், நம் உடல் சுமையாகத் தோன்றுவதில்லை. ஆனால், அம்பாளைச் சரணடைந்த ஆண்டவருக்கோ, உடல்சுமையாகிறது.

**இந்த உடற்சுமையை ஏன்சுமந்து நொந்து அலைந்தேன்**
**பந்தம் கடந்த பராபரையே - சுந்தரியே**
**வாங்குதற்கு நீஒருத்தி வல்லாளே வந்தசுமை**
**தாங்குவதும் இல்லைமெய்தந் தால்.** (பாடல் 33, பக்கம் 23)
(பராபரை = (பர+அபரா) பரமும் ஆற்றலும் உடைய அம்பாள்)

பாசப் பிணைப்புகளும் இறப்புமற்ற அம்மைக்கும் உடற்சுமை இல்லை. ஆனால், ஆண்டவர்தம் சுமையை வாங்குதற்கு, அம்மை எங்ஙனம் வல்லாள் என்றால், அவள் மெய்ஞானம் தருபவள், 'உடல் நான் இல்லை', எனவும் 'பிறப்பற்ற எனக்கு உடல் சுமை எவ்வாறு பொருந்தும்', எனவும் மெய்ஞானம் தந்தால், அவளே சுமையை வாங்கிக் கொள்ளும் வல்லாள் ஆகிறாள்.

படைக்கப்பட்டன எல்லாம், வாழ்ந்து ஒடுங்கவேண்டியுள்ளது. இதற்கிடையே மிகப்பலரின், பல்வேறு வகையான மனங்கள் அலைந்துகொண்டே உள்ளன. இதற்கு ஒரு வழி வேண்டும். படைத்தவளே அத்தகைய வழிகாட்ட இயலும் எனுங் கருத்தில்,

**உன்உருவில் இவ்உலகம் உண்டாய், இருந்து, ஒடுங்க**
**முன்னும் பினும்இருந்த மூலமே - பின்னம்அற**
**எவ்உலகும் தானாய் இருந்தமௌ னத்தலைவி**
**தவ்வுமனம் தீரவரம் தா.** (பாடல் 32, பக்கம் 23)

(மூலம் = ஆதாரம்/தொடக்கம், பின்னம் = பிரிவு / சிதைவு, தவ்வும் = அலையும்) என ஆண்டவர் வேண்டுகிறார். அம்பாள், படைப்பிற்கு முன்னரும், படைப்பு ஒடுங்கிய பின்னரும், பின்னமற உள்ள மூலமாவாள். படைப்பில், அவள் 'உலகம் தானாக' உள்ளாள். (பல வகையாய் அலையும் உலகைப் படைத்தவள், வகைப்பிரிவு இன்றி மௌனமாக உள்ளாள். மௌனமே, தவ்வும் மனம் தீர வரம் எனத் தெரிகிறது.)

அத்துவித தத்துவத்தில் அடிக்கடி பயன்படுத்தப்படும் சில கோட்பாடுகளுக்கு ஆண்டவர் எவ்வாறு செய்யுள் வடிவம் தந்துள்ளார் எனத் திருநெல்லை வணக்கத்தில் அறிகிறோம். இவை வருமாறு:

1) **மாயை :**
"தொன்று தொட்டுவரு மாயா துவந்துவமாம் சொப்பனம் விட்டு
என்று தொலையும் ....." (பா 36)

2) **36 தத்துவங்கள் :**
"ஆறாறும் பொய்யாம் அதில்பயனும் பொய்யாகும்
ஆறாறும் பொய்யா அறிவதும் பொய்" (பா 48)
ஆறாறும் காணற்குஇனன் ஆகும் காரணியை" (பா 50)

3) **படைப்பு :**
"பல்லுருவும் படைப்பாளை, படைத்தவையாய்
இருப்பாளை படையாதாளை" (பா 24)

4) **வாசனை / வினை :**
"சத்தம் முதல் பஞ்ச விடயப் பழம் பகையைத்
தீர்ப்பதென்றோ துஞ்சும் உடல் தீர்வதென்றோ சொல்" (பா 34)

5) **பிறப்பு / இறப்பு :**

"மாண்டே சனித்து ஆகாமல் உன்அடி வைத்து
அதனை வேண்டாதிருக்க வரம்தா" (பா 30)

6) **அஞ்ஞானம் :**

"தன்னை மறந்து உன்மத்தன் தான் நடிக்க வந்ததுபோல்
என்னை மறந்து இத்தேகம் எய்தியதே" (பா 40)

7) **இரட்டைகள் :**

"இராகத் துவேடமுடன் யான் ஆக்கையோடிருந்து" (பா 41)

8) **நாமரூபம் :**

"விழுப்பொருள் இது எனக்கண்டும், ஈண்டுஉறும்
நாமஉரு எலாம் சிவமா இதயத்தில் உணர்ந்து
இவை மறந்தும்" (பா 13)

9) **துவிதம் :**

"நான் அவன் அது ஈது எனலும் ஆயினாளை
ஆனசகம் வர நிமித்தம் ஆயினாளை" (பா 25)

10) **அகங்காரம் :**

"படியளந்த மால்அயனும் அரனும் எனதுயான்
என்னும் பாவத்தாலே மடிய" (பா 22)

11) **சித்திகள் :**

"இருநான்கு சித்திகளில் இச்சைவைத்தல் போதும்
நல்லிரும்பு பொன்னாக்கும் நசையதுவும் போதும்" (பா 27)

12) **ஆரோபம் (கயிறு-பாம்பு) :**

"நாரா இருக்க அரவாகக் குறித்து நலிவதுபோல்
வாராதிருக்க உருநாமம் நாடிவரும் நலிவு
பாராதிருக்க வரம் தா" (பா 29)

13) **திரிபுடி :**

"உனது திருவடி நிழலில் திரிபுடி மறந்து
திரமொடு சேரும்நாள் உளதோ" (பா 11)

14) ஞானம் :

"அன்னமே அன்னம் அளிப்பாய் அஃதின்றேல் கூழ்காடி
என்னத்தால் பேதம் எனக்கு" (பா 35)

"எங்கும் சிதம்பரமாய் இன்புறுவாய் உன்வடிவில்
தங்கி இருக்க வரம் தா" (பா 41)

"உன் உருவே நானாக உன்னு" (பா 45)

பல்வேறு ஆசிரியர்களாலும் இறைவணக்கமாகப் பாடப்பெறும் பாடல்கள் பெரும்பாலும் இறைப்புகழை மட்டும் போற்றும் வகையைச் சேர்ந்தவை. ஆண்டவரோ, தத்துவத்தையே இறைவணக்கமாகப் போற்றியுள்ளமையைக் கண்டோம். ஆனால், ஆண்டவரும் பொதுவாகப் போற்றுவதாக அமைந்துள்ள ஒரு செய்யுள் கீட்கண்டவாறு

**ஓராறு சமயர்உளத்து உணராய் போற்றி**
**உணர்விலியேன் உணர்வுதனக்கு உணர்வே போற்றி**
**கார்ஆரு மிடற்றோனும் அயனும் மாலும்**
**காண்பரிய ஒளிபோற்றி கரியே போற்றி**
**தார்ஆரும் குலிசன்முதல் தேவர் எல்லாம்**
**தாஅரிய பரஞ்சுடரே தாயே போற்றி**
**சீராரும் கழனியில்வாழ் சிவையே போற்றி**
**திருநெல்லை நாயகியே போற்றி போற்றி.**

(பாடல் 10, பக்கம் 11)

(ஆறுசமயர் = வழிகாட்டும் மதத்தவர், கார்மிடற்றோன் = கரிய கழுத்துடைய சிவபெருமான், அயன் = பிரம்ம தேவன், கரி = விநாயகர், குலிசன் = இந்திரன், தாவரிய = கடக்க இயலாத, சிவை = பெண் தெய்வம்) ஆண்டவர், திருநெல்லை அம்மையை முன்னறி தெய்வத் தாயாகவே காண்கிறார். ஒருசில பாடல்கள் மட்டுமே இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. ஆனால், ஒவ்வொரு பாடலினும், வெவ்வேறு தத்துவங்கள் பற்றிக் கூறப்படுவதால், நாமனைவருமே, இப்பகுதியில் அமைந்துள்ள 50 பாடல்களையும் ஒருமுறை படித்துவிட வேண்டுமென்பது தெளிவு.

அடுத்த இதழில் 'சொரூப வணக்கம்' பற்றிக் காண்போம்

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/09/12/I : உற்பத்திப் பிரகரண இதோபதேசம் .

(முற்குறிப்பு : குருவானவர், நாம் ஒப்பி ஏற்கும் வண்ணம் கூறும் அருளுரையே 'இதோபதேசம்' ஆகும். உற்பத்திப் பிரகரணத்தில், நாம் இதுவரை படித்தறிந்த தத்துவங்களின் உட்பொருள் விளக்கமாக இப்பகுதி அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, இப் பிரகரண முற்கதைகளில், மாயை, சங்கற்பம், அவித்தை, வாசனை, பற்று, திரிபுடி, காண்பன, எனப் பலவாறாகக் கூறப்பட்ட தத்துவங்களெல்லாம் மனம் எனும் அவித்தையோடு தொடர்புடையன என விளக்கப்படுகிறது.

சென்ற இதழில் குறிப்பிட்ட இலவணன் கதையின் சிறு பகுதி மட்டும் இதில் வருகிறது. அதனை முன்னதாகவே சேர்த்துவிட்டதால், மனம் பற்றிய விரிவான தத்துவ ஆய்வு இங்கு மேற்கொள்ளப் படுகிறது. இப் பிரகரணத்தில் இதுவே மிக நீண்ட தத்தவப் பகுதி ஆகும். இதனை இரு பாதிகளாக்கி, மறு பாதி அடுத்த இதழில் தொடரும்.)

தத்துவப் பகுதி : வசிட்டரிடம் இராகவர் இரண்டு கேள்விகள் கேட்டார். அவை,

1. "அறிஞர்களாலும் நீக்குதற்கு இயலாத அவித்தையை எம் போன்றோர் எவ்வாறு நீக்குதல் கூடும்?",
2. "உலகியல் என்பது பொய்த் தோற்றமான மாயை எனவும், இது ஆன்ம தத்துவத்தினுள் கரைந்துவிடும் என முன்னம் கூறியுள்ளீர்கள். ஆனால் உலகியல் தோன்றிக்கொண்டுதானே உள்ளது. அது ஏன் மறையவில்லை?", என்பனவாகும்.

(உட்பொருள் : இல்லாததின் காரணமாக உலகியல் உண்டானது எனப்பட்டாலும், உலகியலால் நாங்கள் உண்மையாகவே துன்ப அனுபமுறுகிறோம். துன்ப அனுபவம் பொய்த்தோற்றம் அல்ல.)

இக்கேள்விகளுக்கான வசிட்ட உபதேசம் இதுவாகும். இது,

**"கேவலமாகிக் கேவலஒளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவாய்
ஓவலில்அறிவு மாத்திரமாகி உறுதுயர் ஒன்றுமற்று ஆறி ....."**

என, துயரமற்ற ஒன்று பற்றித் தொடங்குகிறது. பின்னர்,

1. அவித்தை என்பது யாது?
2. அவித்தையின் ஆற்றல் எத்தகையது ?
3. அவித்தையின் - காரணகாரிய - விசாரணை.
4. அவித்தை நீக்கத்திற்கான வழிமுறை.
5. அவித்தை நீக்கத்தின் பயன்.
6. ஆன்ம தத்துவம் உணர்தல்.

எனும் உட்பகுதிகள் விளக்கப்பட்டு, இவ்விளக்கம், ஆன்ம தத்துவத்திலேயே முடிவுறுகிறது.

**1. அவித்தை என்பது யாது ? :**

அவித்தை என்பது நம் மனமே ஆகும். அது பரமான்ம தத்துவத்திலிருந்து, நீல வானம் போன்ற பொய்த் தோற்றமாக உண்டானது. பரமான்மா, முழுதுமாக சொற்களால் விளக்க இயலாதது. (.... அதுமொழிக்கு அப்பாற்பட்டது. இருப்பினும், சொற்களால் இயன்ற வரை விளக்கப்படுகிறது ....). அதுவே,

**"…..பரமமாம் அறிவின்முன்னே
புறப்படும் பொய்யாம் உள்ளம் புவனவிகற்பங்களென்னும்
பொய்யைக் காட்டும்
சிறப்புள விண்ணிலதாயும் இலதானநீலநிறம் செறிவதேபோல்."**
எனப்படுகிறது.

முற்பிறவியிலுண்டான அனுபவிப்பு மற்றும் வேறுபாடு காணும் தன்மை (போகபேதம்) காரணமாக வாசனை உண்டானது. அவ்வாசனை, தற்பிறப்பில் தொடர்கிறது. தற்பிறப்பின் எண்ணக்குவியல்கள் (விடய சங்கற்பம்) மன விரிவு, மன அலைவு, கற்பனைகள், விருப்பங்கள், பேராசைகள் (மோகம்) ஆகியவற்றின் காரணம் வாசனையே. தேவையற்ற இத்தகைய மனவிரிவே அசுத்தவாசனை எனப்படுகிறது. அவன், இவன், அது, இது, நான், என்னுடையது எனும் தற்கால வேறுபடுத்தல்களெல்லாம்

அசுத்தவாசனையே ஆகும். இவற்றையே உலகியல் (திரிபுடி) என்கிறோம். இத்தகைய வாசனை, சங்கற்பம், மனம், அசுத்த வாசனை, திரிபுடி என்பனவற்றை அவித்தை எனவும் கூறப்படுகிறது. இவை அனைத்தின் காரணம் மாயை ஆகும்.

2. **அவித்தையின் ஆற்றல் :** மாயையிலிருந்து உண்டான தாகையால் அவித்தையும் (மனமும்) அளவற்ற மயக்கங்களைச் செய்ய வல்லது. மனம் ஒன்றில் ஈடுபட்டால், அதன் நினைவாகவே மாறிவிடும். மனம் நினைத்ததையே உறுப்புக்கள் செய்கின்றன. ஆதலால் ஐம்பொறிகளால் உலகியலறிவு (திரிபுடி) பெறப்படுவதால், மனமே திரிபுடிக் காரணம். இவ்வாறு பொய்யான அவித்தை, பொய்யான உலகியலுக்கும், துயரனுபவித்தற்கும் காரணமாகிறது.

3. **அவித்தை பற்றிய விசாரணை :** நம் மன அலைவு, எண்ணக் குவியல்கள், அனுபவிப்பு, வேறுபாடுகாணல் என்பன நமக்குப் பற்றையும், தன்முனைப்பையும் (அகங்காரம்) உண்டாக்குகின்றன. இவையெல்லாம் பேராசை (இச்சை) யில் முடிவுறும். நாம் உண்மையை உணரவிடாது மறைக்கும் ஆவரணம் இதுவே.

"இறப்புறு மாயைக்கு இச்சையே வடிவாம் இதனுடை நாசமே வீடு"

(இறப்புறு = இல்லாது போகும், இதனுடை = இச்சையுடைய)

எனும் மேற்கோளால், இச்சையின் காரணம் மாயை என அறியலாம். இச்சை என்பது தள்ளத்தக்கது (உபாதி) எனச் சாத்திரம் கூறுகிறது. பற்று (இச்சை) நீக்கத்தால் உண்மையை உணரலாம்.

பற்றுக் காரணம் என ஏழு நிலைகளும் (அஞ்ஞான பூமிகள்) உண்மை உணர்விற்கு ஏதுவான ஏழு நிலைகளும் (ஞானபூமிகள்) கீழ்க்கண்டவாறு :

**அஞ்ஞான பூமிகள் :**

1. வித்து நனவு (பீஜசாக்கிரம்) - 'சித்'திலிருந்து வெளிப்படும் ஓர் அறிவு. இது, உயிருக்கு முதலாம் நிலை. இது, 7 பூமிகளையும் தொடர்புறுத்தக் கூடியது.

2. நனவு (சாக்கிரம்) - இதற்கு முன்னம் அறிபடாததும், 'இதுநான்'

என, பிறப்புற்ற உயிர் தன்னைத் தெளிவாக உறுதிப் படுத்துவதுமான சூட்சும நிலை.

3. உயர் நனவு (மகா சாக்கிரம்) - இதற்கு முன்னமிருந்து தொடரும் வாசனை காரணமாக, வேறுபாடுகளைத் திடமாக அறியும் நிலை.

4. நனவுக் கனா (சாக்கிர சொப்பனம்) - நனவு நிலையில் மனக் கற்பனை (மனோராச்சியம்) செய்தல்.

5. கனா (சொப்பனம்) - நனவில் கண்ட பற்பல வேறுபாடுகள் மற்றும் செயல்களை, பின்னர் துயிலில் நினைக்கும் நிலை.

6. கனா நனவு ( சொப்பன சாக்கிரம்) - துயிலில் கண்டு மறந்த கனவை, பின்னர் நனவிலும் காணும் போது, நீண்டநாள் தொடர்புடையதாக நினைக்கும் நிலை.

7. சுழுத்தி (சுஷுப்தி) - மேற்கூறிய 6 நிலையின்றி, திடமான சடமாய்த்துயில் கொள்ளுதல். இதில் கனவு, நனவு, செயல்கள் என்பன இல்லை. மூச்சு ஓட்டம் மட்டுமே உண்டு.

இந்த 7 நிலைகளும் ஒன்றுடன் மற்றொன்று தொடர்புற்று நூற்றுக்கணக்கான மாற்றமும் செயல் வடிவமும் பெறும். ஆனால் இவையெல்லாம் அவித்தையாகும். இந்த விசாரணை மூலமாக 'சத்' அல்லாத (அசத்து) மனதால், பொய்யான உலகியல் உண்டாகிறது என நாம் அறிகிறோம். மேலும், மன அலைவு நீக்கம் பெற வேண்டும் எனும் உறுதியையும் பெறுகிறோம். இத்தகைய உறுதி பெறுவதற்கான 7 நிலைகள் ஞான பூமிகளாகும்.

ஞானபூமிகள் :

1. நல் விருப்பம் (சுபேச்சை) - உலகியல் மயக்கம் நீக்கி, உண்மை உணர்வு (ஞானம்) பெற விழைதல்.

2. விசாரணை (விசாரம்) - நற்பண்புகள், நல்லோர் கூட்டு, சாத்திரப்படிப்பு மற்றும் இவை மூலம் கிடைத்த அறிவை ஆய்வு செய்தல்.

3. மெலிவுற்ற மனம் (தநுமாநசி) - பொருள் ஈடுபாட்டு நலிவால் மன

அழுத்தம் குறைவுற்று, நினைவுகள் குவிதல்.

4. சாந்தம் பொருந்துதல் (சத்துவாபத்தி) - மனத்தூய்மை காரணமாக சித்தம் திடமுற்று ஆன்மாவில் பொருந்துதல்.

5. மறுபிறப்பின்மை (அசம்சத்தி) - முற்கூறிய நான்கு பயிற்சிகளில் மூழ்கியதால், பற்றற்று, மெய்ப்பொருளின் பெருமை வெளிப்பாட்டுடன் இருக்கும் ஆற்றல்.

6. பொருள் நினைவு நீக்கம் (பதார்த்த அபாவனை) - உள்ளும் புறம்புமாக, உலகியல் பொருள்களின் நினைவு நீங்கி, பரம்பொருளின் நினைவாகவே ஆதல்.

7. தற்பர இயல்பு (துரியம்) - மேற்கூறிய ஆறு நிலைகளுமற்று, அவற்றை மறந்து, எப்போதும் தற்சுபாவத்தில் நிலைபெறல். (....இதுவே நனவில் சுழுத்தியெனவும், சீவன் முத்தனின் நிலை எனவும் கூறப்படுவது....)

இவ்வாறு கூறப்பட்ட ஞான பூமிகளில் எதனையேனும் அடைந்தவர், முன்னேற்றம் மட்டுமே பெறுவார். அவர், அஞ்ஞான பூமிக்குள் சென்றுவிடமாட்டார். அத்தகையோரைப்பற்றி,

**"தனை அறிவு நிட்டைஉளோர்க்கு எய்தலாகும்**
**தத்துவபூமிகள் அறிந்த தலைமை மேலோர்**
**நினையவும் தாழவும் உரியார் பொறிகள் எனும்**
**நெடும் பகை வென்றோர் அழியா நிலையில் நின்றோர்**
**துனைதரு பல்உயிர் இறைஞ்ச மேலாய் வாழும்**
**சுரேந்திரரும் நரேந்திரரும் துரும்பாய்த் தோன்றும்**
**அனையபெரும் பதம்பெற்றோர் அவரே ஆகும்**
**அல்லாதோர் பவக்கடலில் அமிழ்ந்தா நிற்போர்."**

எனக் கூறப்படுகிறது.

III/09/12 தத்துவப்பகுதி, அடுத்த இதழிலும் தொடரும்....

*(தொடரும்...)*

**சித்த ஞானம்** (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

**"அருள்செய்வான் அமரும்கோயில்**
**வலம்வந்த மடவார்கள் நடம்ஆட**
**முழ(வு)அதிர மழைஎன்(று)அஞ்சிச்**
**சிலமந்தி அலமந்து மரம்ஏறி**
**முகில்பார்க்கும் திருவையாறே"**

என்று பாடும் திருஞான சம்பந்தரது திருவையாற்றுத் தேவாரம். முத்தியை விரும்புவோர் நம் உள் இருக்கும் மெய்ப்பொருளை உணர்தல் வேண்டும். மண்ணாகவும் ஏழுகடலாகவும் எண்ணாகவும் எழுத்தாகவும் இசைந்த ஏழு பண்களாகவும் கண்ணாகவும் கண்ணின் மதியாகவும் அக்கண்ணுள் ஆடும் பாவையாகவும் உள்ள இறைவன் நம்மை நாடி வந்து அருள வேண்டும். துரியம் கடந்த அவன் தூர தூரமாய் நின்றாலும் நம்மால் அடைய இயலும். அவனை நாம் சிக்கெனப் பிடித்துக் கொள்ள வேண்டும். அதனால்தான் மாணிக்க வாசகர் தம் திருவாசகத்தில்,

**"பால்நினைந்(து) ஊட்டும் தாயினும் சாலப்**
**பரிந்துநீ பாவியேன் உடைய**
**ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி**
**உலப்(பு)இலா ஆனந்தம் ஆய**
**தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்தஎன்**
**செல்வமே சிவபெரு மானே**
**யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்**
**எங்(கு)எழுந்(து) அருளுவ(து) இனியே"**

என்று கேட்பதைக் காணலாம். அப்படிப்பட்ட இறைவனை அடைந்தால் முத்தி சித்தியாகும். அதற்குச் சாத்திரங்கள் எதனையும் சொல்ல வேண்டாம். இறைவனை அறிந்து அவன்பால்சேரின் நமக்குச் சோதி வடிவுடைய இறைவனைக் காணும் பேரின்பத்தை அடையலாம் என்பார் சித்தர் சிவவாக்கியர்.



**"சாத்திரங்கள் ஓதுகென்ற சட்டநாத பட்டரே!**
**வேர்த்(து)இரைப்பு வந்தபோது வேதம்வந்(து)**
**உதவுமோ?**
**மாத்திரைப் போதும்உளே அறிந்துதொக்க வல்லிரேல்**
**சாத்திரப்பை நோய்கள்ஏது? சத்திமுத்தி சித்தியே"**

அவன் இருக்குமிடம் தூரம் தூரம் என்று சொல்பவர் சோம்பேறிகள். அண்டங்கள் அனைத்திலும் பரந்து காணப்படும் பராபரமாய் நிற்பவன் இருக்கக் கூடிய இடத்தை விட்டு விட்டு அவன் இல்லாத இடத்தை நாடி ஓடுகின்ற ஊமை மக்களே! அவன் நம் உள்ளத்திலேயே உள்ளான் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள் என்பார் சிவவாக்கியர்.

இதனையே அப்பர் பெருமான் சோதி வடிவாய் மறைந்துள்ள இறைவனைக் காணும் வழி எந்த வழி? என்று சொல்லுகின்ற போது உலகியல் உவமைகளைக் காட்டி எளிதாக நாம் அவனை அடையும் வழியை விளக்குகின்றார். பண்டைய மனிதன் நெருப்பை உண்டாக்க நினைத்த போது அவன் ஒரு மரத்துண்டுடன் இன்னொரு மரத்துண்டைத் தேய்த்தான். அந்த உராய்வில் இருந்து தோன்றிய நெருப்புப் பொறிகளைக் கொண்டு தீயை வளர்த்தான். இன்றும் சிலர் ஆலய வேள்விச் சாலைகளில் வேள்விக்கான தீயை ஒரு குவியாடியைச் சூரியன் முன் காட்டி அதன் கீழே ஒரு பஞ்சை வைத்துச் சூரியனின் ஒளியை மையப்படுத்தி நெருப்பை உண்டாக்குவர். அந்த மரத்துண்டங்களில் மறைந்துள்ள நெருப்பை நாம் இவ்வாறு கட்டையைக் கடைந்து வெளிப்படுத்துகிறோம். நெய் வேண்டுவோர் பாலைக் காய்ச்சி, அதனைத் தயிராக்கி அதனை மத்தால் கடைந்து வெண்ணெய்யைப் பெற்று அதனை உருக்கி நெய் பெறுவர். எனவே பாலில் மறைந்துள்ள நெய்யை இவ்வாறு கடைந்து பெறுகிறோம். விறகில் தீயும் பாலில் நெய்யும் மறைந்திருப்பது போல இறைவனும் நம் உள்ளத்திலே மறைந்துள்ளான். அவனைக் காண வேண்டுமானால் உறவு என்கின்ற மத்தை நட்டு உணர்வாகிய கயிற்றினால் நன்றாக இழுத்துக் கடைந்தால் இறைவன் வெண்ணெய் போல முன்னே தோன்றுவான் என்ற கருத்தமையப் பாடிய பதிகம் இது.

**“விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்**
**முறைய நின்(று)உளன் மாமணிச் சோதியான்**
**உறவு மோல்நட்(டு) உணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே”**

இதே போக்கு சிவவாக்கியர் பாடலிலும் காணப்பெறுகின்றது.

**“நாலுவேதம் ஓதுவீர் ஞானபாதம் அறிகிலீர்**
**பாலுள்நெய் கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்**
**ஆலமுண்ட கண்டனார் அகத்துள் இருக்கவே”**

என்று பாடுகிறார்.

விதையின்றி எதுவும் தோன்றாது. அனைத்திற்கும் ஒரு மூலப்பொருள் வேண்டும். இந்த முறை இல்லாத தன்மை கீழ்மேலாகிய எவ்வுலகத்திலும் இல்லை. அடிவாரம் இன்றி மாளிகை அமைக்க இயலுமோ? பெற்ற தாயை விற்கின்ற பேதைகளே! சித்து இல்லாச் சீவனால் என்ன பயன்? (சித்து அறிவைக் குறித்தது).

**“வித்(து)இன்றிச் சம்பிர தாயம் போலும்இல்லை கீழும்இல்**
**தச்(சு)இலாது மாளிகை சமைத்த வாறும்அது எங்ஙனே?**
**பெற்றதாயை விற்(று)அடிமை கொள்ளுகின்ற பேதைகாள்**
**சித்(து)இலாத போதுசீவன் இல்லைஇல்லை இல்லையே”**

என்று பாடுகிறார் சித்தர் சிவவாக்கியர்.

நாடியை ஒடுக்கி மூச்சுப் பயிற்சி என்னும் பிராணாயாமத்தை அறியாதவர்களாய் உலகிலே மாண்ட மக்கள் எத்தனை பிராணாயாமத்தில் வல்லமை பெற்றவன் தன்னுடைய இரண்டு நாசிகள் வழியாக மூச்சினை உள்ளிழுத்து வெளிவிடும் போது சங்கு ஊதுவது போன்ற ஒலியை எழுப்புவான். அப்படி ஊத வல்லவன் மங்கையைப் பாகம் கொண்ட ஈசனோடு கூடி வாழ்வது திண்ணம் என்று கூற வந்த சிவவாக்கியர்,

**“சங்(கு)இரண்டு தாரைஒன்று சன்னபின்னல் ஆகையால்**
**மங்கிமாளு தேஉலகில் மானிடங்கள் எத்தனை?**
**சங்(கு)இரண்டை யும்தவிர்த்துத் தாரைஊத வல்லிரேல்**
**கொங்கைமங்கை பங்கரோடு கூடிவாழல் ஆகுமே”**

என்று பாடுகிறார்.

உலகிடை வாழும் மாந்தர்கள் வாழ்க்கை நிலையாமையை உணருவதில்லை. சித்தம் போனபடி வாழ்கின்ற இவர்களுக்குக் காலனிடம் இருந்து ஓலை வரும்போது என்ன செய்வர்? மரணம் வரும்போது வணங்கினார்க்குத் துணை வருவான் சிவன். இறுதியில் நம் சீவனுக்குச் சிவனே உற்ற துணையாவான் என்பதையும் தம் வாக்கினால் பதிவு செய்து வைக்கிறார் சிவவாக்கியர்.

**"நீளவீடு கட்டிநீர் நெடுங்கதவு சாத்துவீர்**
**வாழவேணும் என்(று)அலோ மகிழ்ந்(து)இருந்த மாந்தரே**
**காலன்ஓலை வந்தபோது கைகலந்து நின்றிடும்**
**ஆலம்உண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே**
**வீ(டு)எடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யுமாய்**
**மாடுமக்கள் சுற்றம்என்(று) இருக்கும் மாந்தர்காள்**
**ஓடுபெற்ற அவ்விலை பெறாதுகாணும் உடலமே"**

**"ஐயன்வந்(து)இங்(கு) என்உளம் புகுந்துகோயில் கொண்டபின்**
**வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்ப(து) இல்லையே"**

பரம்பொருளை நேரில் கண்டபின் அங்கு பேச்சுக்கு வேலையில்லை என்பதே இதன் உட்பொருள். நெஞ்சமே ஆலயம். அதுதான் ஆண்டவனின் கருவறை. திருமூலர் கூற்றும் அதுவே.

**"உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்(பு) ஆலயம்**
**வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்"**

என்ற பாடலில் புலன்களை விளக்காக உருவகிப்பார். சிவவாக்கியரும் ஒத்த கருத்தினரே.

கற்சிலைகளுக்கும், செப்புச்சிலைகளுக்கும் ஆடம்பரமான வழிபாடுகள் நடத்துவது தேவையற்றது என்பது சித்தர்கள் கருத்து. பெரும்பெருங் கோயில்களைக் கட்டிச் செங்கல்லையும் மணலையும் கொண்டு கோயில் கட்டி வீணாக்குவதை அறவே வெறுக்கின்றனர். நான் யார்? என்ற தேடல் எழுந்தால் ஞானியாகலாம் என்பது பகவான் இரமணரின் எண்ணமாகும். அதனால்தான்

"கோயிலாவ(து) ஏதடா குளங்கள்ஆவ(து) ஏதடா?
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே!
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆனதும் அழி(வு)அதுவும் இல்லை இல்லை இல்லையே"

என்று பேசுகிறார் சிவவாக்கியர்.

பொதுவாகச் சித்தர்கள் சாதி வேற்றுமை பாராட்டுவதை வெறுப்பவர்கள். இந்த மேனி ஐம்பூதக் கலவைகளால் ஆனது. நம் உடலிலே முக்கால் பகுதி நீர் உள்ளது. மூலக்கனலும் உள்ளது. காற்றும் உள்ளது. தலையுச்சி ஆகாயம் எனப்படுகிறது. பாதம் பூமி என்று சொல்லப்படுகிறது. இந்த ஐம்பூதங்களும் பேருருக் கொண்டால் உலகில் எதுவும் மிஞ்சாது. அவ்வாறு ஐந்தும் ஒன்றாக எழுங்காலம் ஊழிக்காலம். இறுதி வருங்காலம் இவ்வுடல் எரியாலோ மண்ணாலோ அழிக்கப்படும். சாதி பார்த்தா உடலைத் தீயும் நீரும் அழிக்கின்றன. எந்தச் சாதியில் பிறந்த பெண்களாயினும் அவர்கள்பால் அனுபவிக்கும் இன்பமும் வேறாக இருக்குமோ? எச்சாதிப் பெண் நகைகள் அணிந்தாலும் அவைகளிடம் வேறுபாடு உண்டோ? என்று சாதிப்புரட்சியை அன்றே உண்டாக்கித் தீண்டாமையை வெறுத்தவர்கள் சித்தர்கள்.

"சாதிஆவ(து) ஏதடா சலம்திரண்ட நீர்எலாம்
பூதவாசல் ஒன்(று)அலோ? பூதம் ஐந்தும் ஒன்(று)அலோ?
காதில்வாளி காரைகம்பி பாடலம்பொன் ஒன்(று)அலோ?
சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ?"

சித்தர்கள் சிவனையன்றி எவரையும் வணங்குவதில்லை. சிவமே செம்பொருள் என்பதை உணர்ந்தவர்கள். கண்ட கண்ட கோவில் தெய்வங்களை வணங்கும் வழக்கம் அவர்கட்கில்லை. சிவம் மட்டும் அவர் வணங்கும் தெய்வம் இல்லை. எவரெல்லாம் சிவனை வணங்குகின்றார்களோ அவரெல்லாம் அவர்கட்குத் தெய்வம். அதனால்தான் அப்பர் பெருமானாகிய ஆளுடைய அரசு, தன்னுடைய பதிகம் ஒன்றில்,

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்

**மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்**
**மாதேவர்க்(கு) ஏகாந்தர் அல்லார் ஆகில்**
**அங்கம்எலாம் குறைந்(து)அழுகு தொழுநோ யராய்**
**ஆஉரித்துத் தின்(று)உழலும் புலைய ரேனும்**
**கங்கைவார் சடைக்கரந்தார்க்(கு) அன்பர் ஆகில்**
**அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே"**

என்று பாடுகிறார்.

இதனைப் போலவே சிவவாக்கியர் பாடலும் அமைந்துள்ளது.

**"அண்டரகோன் இருப்பிடம் அறிந்(து)உணர்ந்த ஞானிகள்**
**பண்(டு)அறிந்த பான்மைதன்னை யார்அறிய வல்லரே?**
**விண்டவேதப் பொருளைஅன்றி வேறுகூற வகைஇல்லாக்**
**கண்டகோவில் தெய்வம்என்று கைஎடுப்ப(து)**
**இல்லையே"**

என்பார் சிவவாக்கியர்.

சித்தர்கள் புரட்சியாளர்களாகவே இருந்துள்ளனர். கோவில், குளம், தீர்த்தம் என்ற சடங்குகளில் நாட்டம் வையாதவர்கள். ஆடம்பரமான ஆரவாரமான வழிபாடுகளை விரும்பாது உளமார வழிபடும் தன்மையர். பேச்சு நாத்திகர் பேச்சுப்போல் தோன்றினாலும் சித்தர்கள்தாம் மெய்யான ஆத்திகர்கள். தேங்காயில் இளநீர் உள்ளே இருப்பதுபோல் சிவன் நம்முளத்தையே கோயிலாய்க் கொண்டான். இப்படி இறைவன் உள்ளிருக்கையில் நாம் வாய்திறந்து வழிபாடு செய்ய வேண்டிய அவசியமில்லை. சிவவாக்கியர் பாடல் கீழ்வருமாறு சொல்கிறது.

**செய்யதெங்கி லேஇளநீர் சேர்ந்தகா ரணங்கள்போல்**
**ஐயன்வந்(து)இங்(கு) என்உளம் புகுந்துகோயில்**
**கொண்டனன்**

*(தொடரும்....)*

## டாக்டர் நீதியரசர் ஏ.ஆர்.லெட்சுமணன் அவர்கள், கோவிலூரில் பழநி பாதயாத்திரை பற்றிய குறுந்தகட்டை வெளியிட்டுப் பேசிய சிறப்புரை

நகரத்தார்களின் ஒரே மடாலயம் கோவிலூர் மடாலயம் என்பதை நம்மவர் அறிவார்கள். உலகத்தில் வாழும் நம் நகரத்தார் பெருமக்களும் அறிந்து கொள்ளும் வகையில் தமது நற்காரியங்களைத் தொடங்கியவர் சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள். வடக்கே கங்கையாற்றின் கரையில் ரிஷிகேசத்தில் நவீன விடுதியை அமைத்ததுடன் மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் சமய சமூகப் பிரசாரம் மேற்கொண்டு அமெரிக்க நாட்டிலும் கால்பதித்த பெருமைக்குரியவர் சீர் வளர் சீர் நாச்சியப்பர். கோவிலூரில் சனாதன நெறியில் அவர்கள் தொடங்கிய பற்பல பணிகளைத் தொடர்ந்து வருகிறார்கள் இன்றைய பட்டம் சீர் வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள்.

அதனோடு நம் நகரத்தார்களின் மிகப் பழைய பாரம்பரியம் மிக்க கலைகள் சமய நெறிகளையும், மரபுகளையும், விழாக்களையும் அழியாத ஆவணங்களாக மலரச் செய்து வருங்காலச் சந்ததியினருக்குச் சென்று சேர வேண்டிய அருட்சொத்தாகப் போற்றிப் பாதுகாத்து வைக்க வேண்டுமென்று சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் அரும் உள்ளங்கொண்டு அதற்காக அயராது உழைத்து வருகிறார்கள்.

இந்த வகையில் ஆண்டுதோறும் தைப்பூச நாளில் பழனிக்குப் பாத யாத்திரை சென்று வரும் நிகழ்வினையும், ஏறத்தாழ 400 ஆண்டுகளாகத் தைப்பூச நன்னாளை யொட்டி நம்மவர்கள் காவடி எடுத்துச் செல்லும் வரலாற்றுச் சிறப்புமிக்க பக்திப் பயணத்தையும் ஆவணமாக்கி நமது சந்ததியினருக்கும், பக்தி உலகிற்கும் வழங்கத் திருவுள்ளங் கொண்டார்கள் சுவாமிகள்.

ஆவணப்படுத்த ஆர்வங் கொண்ட சுவாமிகள் பழநிப் பாதயாத்திரை குறித்தும் காவடி எடுத்தல் குறித்தும் முன்னோர் பொதிந்து வைத்த வரலாற்றுச் சான்றுகளைத் தேடி எடுக்கச் செய்தார்கள். இத்துறையில் பழைய ஓலைச் சுவடிகளைப் படித்துப்

பார்த்து, சைவ சித்தாந்த இமயம் தேவகோட்டை வயிநாகரம் பாலகவி வெ. இராமநாத செட்டியாரால் ஒப்புநோக்கப் பெற்று முன்னாள் மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தராக விளங்கிய அருந்தமிழ் அறிஞர் டாக்டர். வ.சுப. மாணிக்கனாரின் முன்னுரையுடன் வெளிவந்த நூல் சுவாமிகளுக்கு ஆதாரமாகக் கிடைத்தது. இது தவிர ஏறத்தாழ 4 நூற்றாண்டுகளுக்கு முன் பழநிக் காவடி யாத்திரையைத் தொடங்கி வைத்தவர்களும், பற்பல அருள் அதிசய அற்புதங்களைச் செய்து பழநி முருகனருளால் நோய் நீக்கிய அருளாளர்களாக விளங்கியவர்களுமான நெற்குப்பை அடியவர்கள் இல்லத்தில் உள்ள பழைய ஏட்டுச் சுவடிகளும் கிடைத்தன. இன்னும் அதி ஆதாரமாகப் பழநியில் இன்று வாழ்ந்து வரும் தெய்வ சிகாமணிப் பண்டாரம் குடும்பத்தினரிடமிருந்தும் ஏடுகள் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகளுக்குக் கிடைத்தன.

இவை பழைய மரபுகளையும் வழக்கங்களையும் ஒருபுறம் கூற, அதே வழக்கம் இன்றும் மாறாமல் தைப்பூச நாட்களில் பாத யாத்திரையினராலும் காவடிப் பிள்ளைகளாலும் பின்பற்றிவரும் நடைமுறை மறுபுறம் காட்சிப்படுவதைக் கண்ட சுவாமிகள் மகிழ்ந்து காட்சி, ஆவணம், சாட்சி என்ற மூன்று பரிமாணங்களால் இந்த விழாக்களை ஆவணப்படுத்த ஆணையிட்டார்கள். அப்பணியைத் தகுதிமிக்க குழுவினரிடம் ஒப்படைத்துத் தாமே நேரில் பார்வையிட்டுப் படம் எடுப்பது, பதிவுரு செய்வது, ஒலி, ஒளி சேர்ப்பது போன்ற துறைகளில் அனுபவம் மிக்க குழுவினரைக் கொண்டு இந்தப் படத்தை ஆவணமாக்கி அழகான குறுந்தகடு ஆக்கியுள்ளார்கள் சுவாமிகள்.

இந்தக் குறுந்தகட்டைப் பார்க்கும் போது நாமும், கந்தன் காவடிகளோடும் பாதம் நோவ நடக்கும் பக்தர்களோடும் பயணமாகிறோம். அவர்கள் கிடந்த இடத்தில் கிடந்து, நடந்த இடத்தில் நடந்து, தொழுகின்ற இடத்தில் தொழுது, கட்டியம் கேட்குமிடத்தில் கேட்டு, ஆடும் இடத்தில் ஆடி, சூடும் இடத்தில் சூடி மகிழ்வது மட்டுமின்றி, கந்தனின் கருணையையும் முருகனின் முழு அருளையும் பருகுகிறோம். ஒரு நூலின் பயன் மனிதன் பண்படுவது என்பார்கள். அதே போலே இந்தக் குறுந்தகட்டின் பயன் பார்க்கும் மனிதன் புனிதனாவது என்பது உறுதி.

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (உபநிடதப் பொருளுரைத்த படலம்)

அரிஅயன் போற்ற வன்னி அடிமுளைத்(து) எழுந்த வற்கும்
பரிபுரம் புலம்பு பாத பங்கயத் துமாதே விக்கும்
திரிபுவ னேசன் என்றும் திரிபுவ னேசை என்றும்
விரிதர வந்த நாம காரணம் விளம்ப வேண்டும் 1

சாற்றும்அவ் உமையாள் மீட்டும் சாலிவா டீசை என்னப்
போற்றும்ஓர் நாமம் பூண்ட(து) என்னைஇப் பொருவி லாத
ஊற்றுநீர்ப் பொய்கை நாமம் ஒருமதுப் பொய்கை என்றும்
வீற்றுவீற் றாய சாப விமோசனப் பொய்கை என்றும் 2

ஓதுவ(து) என்னை இந்த நதிமது நதிஎன்(று) ஓதற்(கு)
ஏ(து)என் பெருமை வாய்ந்த இத்தலம் சாலி வாடி
ஆதல்என் இவற்றை நாயேன் அறிதரத் தெருட்டு கென்று
காதலில் பணிந்து போற்றிக் கைதவன் வேண்டி னானால் 3

தோட்(டு)அலர் அலங்கல் மாலை துயல்வரு தடந்தோட் பாண்டி
நாட்டவன் அன்பு நோக்கி நாம்ஒரு முகூர்த்த நேரம்
பாட்(டு)அளி துதையும் கொன்றை மாலை யான் பாதம் எண்ணி
வேட்டவா உரைத்தும் என்று விளம்பிடல் உற்றாம் அன்றே 4

யா(து)ஒரு காதை கேட்டால் எண்ணரும் பிரம கத்தி
ஆதிய அனைத்தும் நீங்கி முத்தியே அடைதல் ஆகும்
மேதகும் அனைய காதை விளம்புவ(து) இன்று கண்டாய்
கோ(து)அற வினாய எல்லாம் வெளிப்படும் குறித்துக் கேள்நீ 5

### வேறு

முன்னம்மதுப் பிரியன்என மொழிமுனிவன் ஒருவன்உளன்
அன்னவன்எத் தருகலையும் ஐயம்முதல் அறத்(து)உ ணர் ந்தோன்
பன்னரும்இந் தியக்குறும்பு பாற்றுபுவெண் நீ(று)அணிந்து
நன்னயக்கண் மணிபூண்டு நயந்திகழ்ஐந்(து) எழுத்(து)உள்வோன்6

மேயசராசரம் ஆகி விரிந்தசகம் முழுவதும் மெய்ப்(பு)
ஆயபொருள் இடத்(து)இருந்(து)உற் பவிக்கும்எதன் இடத்(து) ஒடுங்கும்
ஆயபரம் பொருள்ஒன்றே அகிலகா ரணப்பொருள்அத்
தூயசுகோ தயப்பொருளைத் துகள்அறநன்(கு) உணர்பொருட்டு 7

நித்தியமாய் நிட்களமாய் நிரஞ்சனம்ஆய் நிராமயமாய்ச்
சத்தியமாய்ப் பேரொளியாய்த் தயங்குசிவப் பிரியமாய்
புத்திமுத்தி யும்நினைத்த போதினும்நல் குவதாய்எச்
சித்தியும்உய்த்(து) அருள்கொழித்துச் செழித்திடும்இச் சமிவனத்தில் 8

ஒருதிவலை சென்னியின்மேல் உற்றாலும் மற்றுஅவருள்
கருதியகா ரியம்எல்லாம் கைநெல்லிக் கனிஆக்கிச்
சுருதிமுடிப் பொருள்உணர்ச்சி தோன்றஅளித்(து) இனி(து)இலங்கிப்
பொருதிரைகள் மலிந்தமதுப் புட்கரணிக் கரைமேவி 9

கடல்அரிய புனல்குடித்த கருமேகம் தடிந்(த்)துஈன்று
விடல்அரிய(து) எனக்கூற வில்ஒன்று வெளிப்படுத்தித்
தடல்அரிய தாரைச ளசளளனஓர் நானிலத்தும்
படல்அரிய குளிர்தூங்கும் படிபொழிகார் காலத்தும் 10

மரம்முழுதும் தலைபனிப்ப வயங்குகொடி களும்நடுங்கப்
பரவும்இரை கவராது பறவையொடும் அர(வு)ஒடுங்க
உரவுதப மண்ணுலகத்(து) உள்ளவர்யா வரும்நடுங்க
விரவுகுளிர்ப் பிணிமேல்மேல் மிடைகூதிர்க் காலத்தும் 11

பொழுதுபடும் முன்னாகப் புந்திகவன்(று) யாரும்உடன்
முழுதும்மயி ரால் அமைத்த முழுப்போர்வை கொடுமூட
அழுதுதணந் தவர்புலம்ப அதரம்வெடித் திடஉழனும்
கழுதுநிலை குலையவரும் முன்பனிகூர் காலத்தும் 12

கதிர்உதயம் ஆகியது கண்டும்கா ணார்போல
முதிரும்மயல் உறமடவார் முலைமுகடு மார்(பு)அழுந்தப்
பிதிரும்வகை இல்லாது பெரி(து)அணைத்(து)ஆ டவர்துயில
எதிரும்ஒரு பின்பனிஎன்(று) எடுத்(து)இயம்பு காலத்தும் 13

காமம்முதல் ஓர்ஆறும் கலவாது புறம்போக்கி
மாமகள்நா யகன்கலைமான் மணவாளன் உணர்(வு)அரிய
தாமநறும் குழல்பாகத் தம்பிரான் அடிகருதி
நாமம்மிகு சீதளநீர் முழுகுபுனல் தவம்செய்தான் 14

தாங்களுக்(கு)ஆர் இடம்ஆய தரைமகள் வெப்(பு)அடையாமல்
துங்கம்மிகு காப்(பு)இயற்றும் தன்மைஎனச் சூழ்மரங்கள்
பங்கம்இல்பல் இலைஉகுக்கப் பைம்புதல்ஆ திகள்கருக
எங்கும்வெயில் பரப்பிமிகும் இளவேனிற் காலத்தும் 15

விண்முழுதும் கொதிக்கநெடு வேலைமுழு தும்கொதிக்க
மண்முழுதும் கொதிக்கஉரை வாய்முழுதும் கொதிக்கநினை
எண்முழுதும் கொதிக்கஎவன் இத்தகுவெப்(பு) எனநோக்கும்
கண்முழுதும் கொதிக்கஎழு முதிர்வேனிற் காலத்தும் 16

எண்ணியஐந்(து) அழல்நாப்பண் எழுகாமத்(து) அழல்அவித்து
கண்ணியசெந் தழல்உருவக் கடவுள்அணி மன்(று)ஆடும்
புண்ணியமென் மலர்ப்பாதம் பொருந்தநினைத்(து) இனி(து)அமர்ந்து
பண்ணியமா தவப்பெரியோய் பகர்அருமா தவம்புரிந்தான் 17

இவ்வண்ணம் கொடியதவம் இயற்றிடும்அத் திறல்நோக்கிக்
கைவண்ணக் குலிசத்தான் கருதாமல் இடையூ(று)ஆம்
அவ்வண்ணம் புரிகுவன்என்(று) அமரரொடும் உறச்சூழ்ந்து
மைவண்ண முகில்கூவி மழைபொழிக கடி(து)என்றான் 18

புருகூதன் கருத்(து)உணர்ந்து புயல்எல்லாம் புறப்பட்டு
வெருவாது கடல்வறப்ப வயிறுவீங் கிடக்குடித்தே
ஒருவாத தடித்துவிடுத்(து) உரும்ஏறு பலவீழ்த்தி
மருவாத பயம்உலகம் மருவமழை பொழிந்தனவால் 19

தீராத மழையினொடு கொடுங்காலும் செயிர்த்(து)எழுந்து
பேராத பெருந்தருவும் வேர்பறியப் பேர்த்(து)எறிந்து
வாராத கெடுங்காலம் வந்த(து)என உல(கு)உலையச்
சோராத கடுப்பினொடும் சுழற்றிஎறிந் ததுமாதோ 20

இவைமுதல்ஆ கிய இடையூ(று) எத்தனையோ இயற்றிடவும்
அவைகருதா(து) அசை(வு)இலனாய் மதுப்பிரியன் அமர்ந்தனனால்
நவைஅறுசீர் மாதேவன் நகுமலர்ச்சே வடிகருதும்
செவைஉடையோர் ஊழியினும் திறம்புசலிப்(பு) அடைவர்கொலோ 21

இடையூறு மிகப்புரிந்த இந்திரனுட் சமழ்ப்(பு)எய்தி
அடைசேர்கற் பகமாலை அமரரொடும் வெருக்கொண்டு
தொடையாளும் நறுங்கூந்தல் கலைமாது துணைமுலைதோய்ந்(து)
உடையாத விறல்மார்பத்(து) ஒருவன்இரு சரண்அடைந்தான் 22

விதுப்பிரிய முடிப்பெருமான் விளங்(கு) அருள் பெற்(று) எவ்உலகும்
புதுப்பிரியம் மிகப்படைக்கும் புத்தேளே சமிவனத்தில்
மதுப்பிரிய முனிஇயற்று தவம்ஆற்றி எங்கள்குது
குதுப்பிரியா(து) அருள்என்று கூறிமீண்டும் பணிந்தான் 23

வையம்எலாம் நடுநடுங்க மாதவம்செய் கின்றான்என்(று)
எய்யஉரைத் திடல்கேட்ட நான்முகத்தோன் இதுபுகல்வான்
வெய்யகுலி சப்படையாய் வேறொன்றும் கருதிலான்
செய்யமன மதுப்பிரியன் கருத்துநீ தெளிந்திடுவாய் 24

நம்பதமே முதலாக நாடுபெரும் பதம்எல்லாம்
கம்பம்இலா அம்முனிவன் கான்றசோ(று) எனக்கண்டான்
வம்(பு)அவிழ்நல் பசுநறுந்தார் மன்னவனே உன்நகருக்(கு)
உம்பரொடும் போதிஎனச் செலுத்தியபின் உதுசெய்வான் 25

பாயவளம் பலபடைத்த வைகுண்டம் படர்ந்துநெடு
மாயவனை அடிவணங்கி மதுப்பிரியன் நலம்கூற
மேயஇரு வரும்கூடி வெள்ளிமலை போய்ப்புகுந்தார்
தூயஉருத் திரப்பெருமான் துணைப்பாதம் தொழு(து)எழுந்தார் 26

வந்த(து)எவன் எனப்பெருமான் வாய்மலர்ந்து கேட்(டு)அருளச்
சந்தமலர் அடிவணங்கிச் சதுமுகத்தோன் உரைசெய்வான்
பந்தம்அகல் சமிவனத்துப் படர்ந்தமதுப் பிரியமுனி
முந்தவரும் தவம்புரிவான் அருள்புரிதல் முறைஎன்றான் 27

முறைஎன்ற மலர்க்கிழவன் முகம்நோக்கி எம்பெருமான்
மறைஎன்ற எல்லாமும் வடித்(து)உணர்ந்த நான்முகத்தோய்
துறைஎன்ற பத்திமிகூஉச் சுத்தசித்த னாய்த்தவத்துக்(கு)
இறைஎன்ற மதுப்பிரியற்(கு) எல்லாரும் செய்வது(கு)எவன் 28

ஆயினும்அச் சமிவனத்தை அகலாது வீற்(று)இருக்கும்
தாயினும்நன் மையதாய சிவலிங்கம் தனைக்கண்டு
காயினும்செய் தவம்தீரா முனிவனையும் கண்டிடநாம்
மேயினும்நல் லதுகண்டாய் மூவரும்மே வுவம்ஆங்கே 29

என்றுதிரு வாய்மலர்ந்து தாமரைமேல் இருப்பானும்
ஒன்றுபெரும் பாற்கடல்மேல் கிடப்பானும் ஒருங்குவரக்
கன்றுமழு மான்ஏந்தும் கைத்தவத்(து)எம் பெருமானார்
அன்றுசமி வனம்புகுந்தார் அமரர்மலர் மழைதூர்ப்ப 30

வந்தஒரு மூவர்களும் வன்னிவன வளப்பெருமைச்
சந்தமுழு வதும்நோக்கித் தனையின்மகிழ்ச் சியர்ஆகிப்
பந்தம்இல்முப் புவனேசப் பராபரனைப் பணிந்(து)ஏத்தி
மந்தஉணர்(வு) ஒழிந்ததவ மதுப்பிரியன் முன்வந்தார் 31

முன்அடைந்து காட்சிதரும் மூவரையும் கண்டுஎழுந்து
கொன்அடைந்த தவமுனிவன் பணிந்(து) எழுந்து குட ந்தம உற்(று)த்
துன்அடைந்த மகிழ்ச்சியனாய்த் துதிபுரிந்தாங்(கு) எதிர்நிற்பப்
பொன்அடைந்த தாமரையோன் நோக்கிஇது புகல்வான் 32

அடை(வு)அரிய மாதவத்தை அடைந்துநெடுந் தவம்புரிந்த
சடைஉடைய முனிவரநின் தனக்குவரம் கொடுத்திடநல்
நடையஒரு மூவர்எனும் நாங்கள்அடைந் தனமால்நின்
உடையகருத்(து) உரைத்தினத் தொழுதுமுனி உரைத்திடுவான் 33

அடியனேன் செய்ததவம் அதற்குநீர் மகிழ்ந்தீரேல்
படிஇலா என்தவமும் பலம்கொடுப்ப(து) எனில்இன்னே
கடியதா மரைமேலாய் காகுத்தா காபாலீ
மடிஇலாய் யான்கேட்கும் வரமேதந் திடல்வேண்டும். 34

சகலபுவ னங்களுக்கும் தைலவைனேயே அறிதருவான்
இகல்வரும்மா தவம்புரிந்தேன் இனையஒரு மூவருளும்
அகிலபுவ னங்களுக்கும் அதிபர்யார் எனக்கேட்க
நிகிலசரா சரம்ஈன்ற நெடியமறை யோன்உரைப்பான் 35

மேதகுமா முனிவரயான் விதிஉல(கு)எ லாம்கபடைப்பேன்
மாதயையின் அவைஎல்லாம் புரப்பார்இவர் மாயவர்காண்
ஓ(து)அரிய அவைஅனைத்தும் ஒழிப்பர்இவர் உருத்திரராம்
ஆதலின்யாம் மூவருமே அகிலகா ரணர்என்றான் 36

அறி(வு)உருவ முனிபிரமன் அறைந்ததுகேட்(டு) அறைகுவான்
நெறிபுகழ்இந் திரன்முதலோர் திசைக்(கு)இறைவர் ஆயதுபோல்
மறிவருநீர் சிருட்டிதிதி மாய்ப்(பு)எனும்முத் தொழிலினுக்கு
நெறிபுரியும் மதிகர்என நின்மொழியால் உணர்ந்தனன்யான் 37

பன்னரிய மகத்துவத்தால் பரவியபேர் இத்தலத்தில்
என்னரும்வந்(து) இனி(து)ஆடும் இத்தீர்த்தக் கரைமேவி
நன்னர்உறு தவம்புரிந்த நான் ஒவ்வோர் தொழிற்(கு) அதிபர்
என்னவரும் நுமையுணரின் எப்பிரயோ சனமெனக்கே 38

*(தொடரும்...)*

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**